தமிழ்நாட்டுக் கல்வெட்டுகள் வரிசை எண் : 34

# விருதுநகர் மாவட்டக் கல்வெட்டுகள்

## தொகுதி - II

# VIRUDHUNAGAR DISTRICT INSCRIPTIONS

## VOLUME - II

# விருதுநகர் மாவட்டக் கல்வெட்டுகள்

## தொகுதி - 2

பொதுப் பதிப்பாசிரியர்

முனைவர் **தி. ஸ்ரீ. ஸ்ரீதர்** இஆப.,

**முதன்மைச் செயலாளர் (ம) ஆணையர்**

பதிப்பாசிரியர்கள்

**பொ. இராசேந்திரன்**

**முனைவர் சொ.சாந்தலிங்கம்**

**சொ. சந்திரவாணன்**

தமிழ்நாடு அரசு தொல்லியல்துறை

சென்னை - 600 008.

2009

# BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title | : | VIRUDHUNAGAR MAVATTAK KALVETTUKAL |
| Genral Editor | : | Dr. T.S. SRIDHAR, I.A.S., |
| Copy right | : | T.N. State Dept. of Archaeology |
| Subject | : | History |
| Language | : | Tamil |
| Edition | : | First |
| Publication No. | : | 207 |
| Year | : | 2009 |
| Type point | : | 11 Pt |
| No.of Pages | : | 198 pages |
| Paper Used | : | 80gsm |
| Typesetter | : | Pavai Printers (P) Ltd.,<br>#6 (142), Jani Jan Khan Road,<br>Royapettah, Chennai - 600 014.<br>Ph : 28482441, 28482973. |
| Printer | : | Department of Archaeology |
| Publisher | : | State Dept. of Archaeology<br>Tamil Valarchi Valaagam<br>Halls Road, Egmore,<br>Chennai - 600 008. |
| Price | : | Rs. 155/- |

முன் அட்டை : அ.மி. நின்ற நாராயணப் பெருமாள் திருமேனி திருத்தங்கல்

பின் அட்டை : த. மானகச்சேரி கல்வெட்டு

அட்டைப்படவடிவமைப்பு : தே. சத்தியவதி அச்சுக்கோர்ப்பாளர்

# பதிப்புரை

தமிழ்நாடு அரசு தொல்லியல்துறை 'கல்வெட்டு முனைப்புத் திட்டம்' என்னும் பெயரில் கடந்த 2004ம் ஆண்டு செப்டம்பர் முதல் தீவிர களப்பணிகள் மேற்கொண்டு பல ஆயிரம் கல்வெட்டுகளைப் படி எடுத்துள்ளது. பல கல்வெட்டுகள் உடனுக்குடன் படிக்கப்பட்டு மாவட்டக் கல்வெட்டுகள் வரிசையில் வெளியிடப்பட்டு வருகின்றன. விருதுநகர் மாவட்டக் கல்வெட்டுகள் முதல் தொகுதி ஏற்கனவே வெளிவந்துள்ளது. தற்போது சிவகாசி, இராசபாளையம் வட்டங்களைச் சேர்ந்த கல்வெட்டுகள் இரண்டாம் தொகுதியாக வெளிவருகின்றன.

இத்தொகுதியில் சிவகாசி வட்டத்திலுள்ள திருத்தங்கல், இராசபாளையம் வட்டத்திலுள்ள சோழபுரம் ஆகிய இடங்களில் உள்ள கல்வெட்டுகள் கணிசமாக இடம்பெற்றுள்ளன. இவை இவ்வட்டாரத்தின் அரசியல், சமூகப் பொருளியல் நிலைகளை அறிந்து கொள்ளப் பெரிதும் துணை புரிகின்றன. திருத்தங்கல் கோயிலை நிருவகித்த 'மூலபருஷை' என்னும் பிராமணர் சபை தமிழகத்தில் ஒரு சில இடங்களில் மட்டும் செயல்பட்டு வந்த குறிப்பிடத்தக்க சபையாகும். இதுபோல தடங்கண்ணிச் சிற்றூருடையான் குருகுலத்தரையன் என்னும் இப்பகுதியின் அதிகாரி கி.பி.13ம் நூற்றாண்டில் இப்பகுதியில் வரலாற்றோடு பின்னிப்பிணைந்துள்ளவன். அவனது பங்களிப்புப் பற்றிய செய்திகளும் கல்வெட்டுகளில் இடம் பெற்றுள்ளன.

இவ்வாறு பல அரிய செய்திகளை உள்ளடக்கிய இக் கல்வெட்டுத் தொகுதி தொல்லியல் துறையின் மற்றொரு முக்கியக் கொடையாக வெளிவருகிறது.

இக்கல்வெட்டுகளைப் படி எடுத்துப் படித்து வெளியிடுவதில் முக்கிய பணி ஆற்றியவர்கள் திரு.பொ.இராசேந்திரன், முனைவர் சொ.சாந்தலிங்கம், திரு.சொ.சந்திரவாணன் ஆகியோர் ஆவர். இவர்களது உழைப்பையும், நன்முயற்சிகளையும் பாராட்டுகிறேன். இத்தொகுதியைப் பதிப்பித்து வெளிக் கொணரும் பணியில் முழுமையான ஈடுபாடுகாட்டி உழைத்தவர் கல்வெட்டாய்வாளர் (முதுநிலை) திருமதி. அர.வசந்தகல்யாணி அவர்கள். அவர்களது ஆக்கபூர்வமான பணிகளுக்கும் எனது பாராட்டுதல்கள் உரியவை. மேலும் களப்பணியின் போது எம்துறை அலுவலர்களுக்கு பலவற்றிலும் ஒத்துழைப்பு நல்கிய திருத்தங்கல் திரு.இரா.பாலச்சந்திரன், தொல்லியர் ஆர்வலர் அவர்களுக்கும் எனது நன்றி.

எம் துறையின் முந்தைய வெளியீடுகளைப் போல இவ்வெளியீடும் வரலாற்று ஆய்வாளர்களுக்கும் ஆர்வலர்களுக்கும், மாணவர்களுக்கும் அரிய சான்றாவணமாகப் பயன்படும் என்பதில் ஐயமில்லை. தமிழகம் இவ்வெளியீட்டை மனமுவந்து ஏற்று வாழ்த்தும் என்பது என் நம்பிக்கை.

முனைவர் **தி.ஸ்ரீ. ஸ்ரீதர்,** இஆப,
முதன்மைச் செயலாளர் (ம)ஆணையர்

சென்னை - 8
நாள் : 26.02.2009

# முன்னுரை

விருதுநகர் மாவட்டத்திற்குட்பட்ட பல்வேறு பகுதிகளிலிருந்து கல்வெட்டு தீவிர முனைப்புத்திட்டத்தின் கீழ் கண்டறியப்பட்டுள்ள கல்வெட்டுகளில், அருப்புக்கோட்டை, திருச்சுழியல், காரியாபட்டி, விருதுநகர், சாத்தூர் வட்டங்களிலிருந்து படியெடுக்கப்பட்ட கல்வெட்டுக்களை உள்ளடக்கியதாக விருதுநகர் மாவட்டக் கல்வெட்டுக்கள் முதல் தொகுதி இத்துறையால் வெளியிடப்பட்டுள்ளது. இத்தொகுதியின் தொடர்ச்சியாக விருதுநகர், சிவகாசி, இராசபாளையம் வட்டங்களிலிருந்து படித்தறியப்பட்ட கல்வெட்டுக்களை உள்ளடக்கியதாக இரண்டாம் தொகுதி அமைக்கப்பட்டுள்ளது. விருதுநகர் மாவட்டத்தில் நிகழ்ந்துள்ள, அரசியல், சமுதாய, பொருளாதார, சமய, கலை நிகழ்வுகளை அறியத்தக்க பல செய்திகளைத் தெரிவிப்பனவாக இக்கல்வெட்டுகள் விளங்குகின்றன.

**சோரம்பட்டி**

திருத்தங்கல்லிலிருந்து வடமலாபுரம் செல்லும் சாலையில் 8 கி.மீ. தொலைவில் உள்ளது இவ்வூர். சோரம்பட்டி கிராமத்தில் முத்துலிங்காபுரம் செல்லும் சாலையிலமைந்துள்ள சிவாலயத்தில் நினைவுக்கல்லொன்றுள்ளது. கி.பி. பன்னிரண்டாம் நூற்றாண்டளவில் எடுப்பிக்கப்பட்டுள்ள இந்நினைவுக்கல், கருநிலக்குடி நாட்டிலமைந்திருந்த திசைசுடர்மணிமங்கலத்தைச் சேர்ந்த குடியன் குறிச்சான் என்ற வீரனின் நினைவாக எடுப்பிக்கப்பட்டுள்ளது.

**காரிசேரி**

திருத்தங்கல்லிலிருந்து வடமலாபுரம் செல்லும் சாலையில் சுமார் 9.00 கி.மீ தொலைவில் உள்ளது. சோரம்பட்டியிலிருந்து 1/2 கி.மீ. தொலைவில் உள்ளது. இவ்வூரிலுள்ள இலட்சுமி நாராயணப்பெருமாள் கோயிலுக்கு முன்னால் கி.பி. 12 ஆம் நூற்றாண்டுச் செக்கொன்றுள்ளது. ஸ்ரீகாரி என்பவர் சார்பாக வீர தச்சன் என்பவரால் இந்த செக்கு செய்தளிக்கப்பட்டுள்ளது.

**திருத்தங்கல்**

விருதுநகரிலிருந்து சிவகாசி செல்லும் சாலையில், சிவகாசிக்கருகில் அமைந்துள்ள திருத்தங்கலில் நுண்கற்கருவிகளும், கறுப்பு சிவப்பு பானை ஓடுகளும் கிடைப்பதிலிருந்து, சற்றேறக்குறைய கி.மு. நான்காயிரத்திலிருந்தே இங்கு மக்கள் குடியிருப்புகள் இருந்து வருகின்றன எனலாம். சங்க காலப் புலவர்களில் சிலர் இவ்வூரினராக இருப்பதிலிருந்து, இவ்வூர் சங்ககாலத்தில் இலக்கியப்படைப்புகளில் சிறந்து விளங்கிய அறிஞர்கள் வாழ்ந்த பகுதியாக விளங்கியமை தெளிவாகிறது. சங்ககாலப் பாண்டியர்களின் தலைநகராக விளங்கிய மதுரையிலிருந்து சேரநாட்டிற்குத் திருத்தங்கல் வழியாக பெருவழி அமைந்திருந்தமைக்குச் சிலப்பதிகாரத்தில் தெளிவான குறிப்புள்ளது. காவிரிப்பூம்பட்டினத்து அந்தணரான பராசரன் என்பவர் சேரநாட்டிற்குச் சென்று, திரும்பி வரும்போது வழியில் திருத்தங்கலில் தங்கியதாக சிலப்பதிகாரம் குறிப்பிடுகிறது.

இத்தகு சிறப்புமிகு திருத்தங்கலில் உள்ள குன்றில், கி.பி. எட்டாம் நூற்றாண்டளவில் பள்ளி கொண்ட பெருமாளுக்காகக் குடைவிக்கப்பட்டுள்ள குடைவரைக் கோயிலொன்றுள்ளது. இக்குன்றின் மேற்பகுதியில் நின்ற நாராயணப் பெருமாளுக்காக கோயிலெடுப்பிக்கப்பட்டுள்ளது. 108 வைணவ திவ்விய தேசங்களுள் ஒன்றாகப் போற்றப்படும் இத்திருக்கோயில் திருமங்கையாழ்வாராலும், பூதத்தாழ்வாராலும் மங்களாசாசனம் செய்யப்பட்டுள்ளது. முற்காலப் பாண்டியர் காலத்தில் கட்டப்பட்ட இக்கோயில், கி.பி.பதின்மூன்றாம் நூற்றாண்டில், முதலாம்

மாறவர்மன் சுந்தரபாண்டியன் காலத்தில், தடங்கண்ணிச் சிற்றூருடையான் சோரன உய்யநின்றாடுவானான குருகுலத்தரையன் என்ற அதிகாரியால் திருப்பணி மேற்கொள்ளப்பட்டு கற்றளியாக்கப்பட்டுள்ளது. முதலாம் வரகுணபாண்டியன் காலத்தில் அளற்றுநாட்டுக்கிழவன் என்பவர் இக்கோயிலில் விளக்கெரிப்பதற்காக ஆடுகளைத் தானமாக அளித்துள்ள செய்தியைக் குறிக்கும் வட்டெழுத்துக் கல்வெட்டு, இக்கோயிலின் தொன்மையைப் புலப்படுத்தும் சான்றாக இக்கோயிலில் இன்றளவும் இருந்து வருகிறது. கி.பி. பதின்மூன்றாம் நூற்றாண்டில், இக்கோயிலின் கருவறை, அர்த்த மண்டபம், மகாமண்டபம் ஆகிய பகுதிகளில் கற்றளித்திருப்பணி மேற்கொண்ட குருகுலத்தரையன், இத்திருக்கோயிலில் தன்பெயரிலும், தன்னுடைய மன்னன் முதலாம் சுந்தரபாண்டியனின் பெயரிலும் சிறப்பு வழிபாடுகளை ஏற்படுத்தி, இவ்வழிபாடுகளின் செலவினங்களுக்காக வேண்டி நிலக்கொடையும் வழங்கியுள்ளார். முதலாம் குலசேகர பாண்டியனின் காலத்தில் திருவரங்கதேவன் திருமண்டபம் அமைக்கப்பட்டு, நரசிங்கதேவருக்கான வழிபாட்டுச் செலவினங்களுக்காக நிலக்கொடையும் வழங்கப்பட்டுள்ளது.

நாகலாபுரம் சமீன்தாராக இருந்த ரெங்கசாமி நாயக்கர் என்பவர், வெள்ளிக்கிழமை பூசைகளை நடத்துவதற்காக, சுக்கிரவாரக் குறடு என்ற மண்டபத்தை கி.பி.1885ல் இக்கோயிலில் கட்டியுள்ளார். இவரது உருவச்சிலையும் இம்மண்டபத்திலுள்ளது.

இத்திருக்கோயிலில் வைகாசித் திருநாள் சிறப்பு வழிபாடுகளை நடத்த, சுந்தரபாண்டியன் காலத்தில் (கி.பி.1221) திருவரங்கதேவன் குன்றெடுத்தான் என்பவரும், அவருடைய இளைய சகோதரர் திருவரங்கதேவன் உய்யக் கொள்வான் என்பவரும், இத்திருக்கோயிலுக்கு நிலக்கொடை வழங்கியுள்ளனர். இத்திருக்கோயிலில் ஆவணி சிறப்பு வழிபாட்டின்போது இறைவன் நெய்யாடியருளியிருக்கிறார். இச்சிறப்பு வழிபாட்டுச் செலவினங்களுக்காக வேண்டி சுந்தரபாண்டியனின் காலத்தில் (1216 1239) ஆத்திரையன் குன்றெடுத்தான் ஸ்ரீவல்லபன் என்பவர் நிலக்கொடை நல்கியுள்ளார். அம்மாவாசை நாட்களில் இறைவனை வீதிவலமாக எழுந்தருளப் பண்ணுவதற்காக சோழமன்னன் முதலாம் குலோத்துங்கனின் காலத்தில் இத்திருக்கோயிலுக்கு நிலக்கொடை வழங்கப்பட்டுள்ளது. இங்ஙனம் இத்திருக்கோயிலில் வைகாசி விசாகம், ஆவணி சிறப்பு வழிபாடு, அம்மாவாசை வழிபாடு போன்றவை சிறப்பாகக் கொண்டாடப்பட வழிவகை செய்யப்பட்டுள்ளது.

நின்ற நாராயணப் பெருமாள் கோயில் வளர்ச்சியில் மகளிரும் பெருமளவில் பங்கெடுத்துக்கொண்டுள்ளனர். அதிலும் குறிப்பாகப் பிற்காலப் பாண்டியர் கல்வெட்டுகளில் மகளிரின் பங்களிப்பு தொடர்பான செய்திகள் பரவலாகக் காணப்படுகின்றன. முத்தூற்றுக் கூற்றத்திலிருந்த அந்தனூரைச் சேர்ந்த காலிங்கராயனான உய்யநின்றாடுவானின் துணைவியார் சடகோபன் திருநங்கை என்பவர் இறைவன் மற்றும் இறைவிக்காக வழங்கியுள்ள நிலக்கொடை, முத்தூற்றுக் கூற்றத்திலிருந்த அந்தனூர் சிறுகம்பூரைச் சேர்ந்த உய்யநின்றாடுவானான உடையார் காலிங்கராயனின் துணைவியார் திருமங்கையாண்டாள் என்பவர் இறைவழிபாட்டிற்குத் தேவையான செங்கழுநீர்ப்பூக்கள் விளையும் நீர்நிலை பராமரிப்புச் செலவினங்களுக்காக வேண்டி நல்கியுள்ள நிலக்கொடை, திருவரங்கதேவன் என்பவருடைய மனைவி ஆட்கொண்டி, சூரியநாராயணன் என்பவருடைய மனைவி திருமகள் ஆகியோர் ஈந்துள்ள ஆடுகள், திருத்தங்கலைச் சேர்ந்த அசிபத்த நாராயணன் என்பவருடைய துணைவியார் கொற்ற நாச்சியார் என்பவர் நந்தா விளக்குக்காக வழங்கியுள்ள கொடை, வெண்புநாட்டு ஸ்ரீவானவன்மாதேவிச் சதுர்வேதி மங்கலத்தைச் சேர்ந்த பொன்னாளிகையார் என்பவரின் மனைவி உய்யவந்தாள் என்பவர் சந்தியாதீபத்திற்காக அளித்துள்ள கொடை, போன்ற பல்வேறு கொடைகளைக் குறிப்பிடுகின்ற பிற்காலப் பாண்டியர் கல்வெட்டுகள் இவ்வகைக்குச் சிறந்த எடுத்துக்காட்டுகள்.

பாண்டியராட்சிக் காலத்தில் திருத்தங்கலின் அமைவிடம் ஸ்ரீபாண்டி நாட்டிற்குட்பட்ட மதுரோதைய வள நாட்டிற்குள் அமைந்திருந்த கருநிலக்குடி நாட்டிற்குள் இருந்ததாகக் கல்வெட்டுகள் சுட்டுகின்றன. மூலபருடையார் என்றழைக்கப்பட்ட அந்தணர் சபை அமைப்பால்

நிர்வகிக்கப்பட்ட பிரமதேயமாக திருத்தங்கல் திகழ்ந்துள்ளமையையும் பிற்காலப் பாண்டியர் கல்வெட்டுகள் தெளிவாக்குகின்றன. திருத்தங்கல் பகுதியை வளப்படுத்திய நீர்நிலைகளாக தேவேந்திர வல்லபப் பேரேரி, நின்ற நாராயணப் பேரேரி போன்ற ஏரிகள் விளங்கியுள்ளமையையும் கல்வெட்டுக்களிலிருந்து தெரிந்து கொள்ள முடிகிறது.

நின்ற நாராயணப் பெருமாள் கோயில் அமைந்துள்ள குன்றில், கிழக்குப் பகுதியில் பெருமாள் கோயிலுக்கருகிலேயே சிவாலயமும் அமைந்துள்ளது. இத்திருக்கோயிலிறைவனாகிய தங்கலீசர், கருநெல்லிநாத சுவாமி என்றும், இறைவி மீனாட்சி என்றும் சுட்டப்படுகின்றனர். நின்ற நாராயணப் பெருமாள் கோயிலின் திருப்பணியை மேற்கொண்ட தடங்கண்ணிச் சிற்றூருடையானாகிய சோரன் உய்யநின்றாடுவானான குருகுலத்தரையனே இச்சிவாலயத்தின் கருவறை, அர்த்தமண்டபம், மகாமண்டபம் போன்றவற்றை அடி முதல் முடிவரை கருங்கல்லால் கட்டி முடித்ததாகச் சுந்தரபாண்டியனின் பதினேழாம் ஆட்சியாண்டுக்கல்வெட்டொன்று தெரிவிக்கிறது. திருத்தங்கலீசர் இனிமேல் பிச்சாடன மூர்த்தியாகக் கபாலம் ஏந்தி பிச்சை எடுக்க வேண்டியதில்லை. அவருடைய வழிபாட்டுச் செலவினங்களுக்காக வேண்டி நிலக்கொடை வழங்கப்பட்டுள்ளதென பிற்காலப் பாண்டியர் கல்வெட்டொன்று புகல்கிறது. இறைவன் மற்றும் இறைவியரின் வழிபாட்டுச் செலவினங்களுக்காக வேண்டி குமார ரெங்கப்ப நாயக்கர் என்பவர் உடையப்பன் குளம் பகுதியிலிருந்து கொடையளித்துள்ளார்.

கி.பி. 17-18 ஆம் நூற்றாண்டளவில் குதிரை வீரன் ஒருவன் நினைவாக நடுகல்லொன்றெடுக்கப்பட்டுள்ளது. வரதுங்கராம தனிப்புலி கலங்காத கண்ட நாயக்கரின் வேலைக்காரனான உள்ளி பொம்மன் கலங்காத கண்டநாயக்கர் என்பவருக்கு இரத்தக் காணிக்கையாக திருத்தங்கலில் நிலம் வழங்கப்பட்டிருந்தமையை இக்கல்வெட்டு புலப்படுத்துகிறது.

**மங்கலம்**

சிவகாசியிலிருந்து கிருஷ்ணன் கோயிலுக்குச் செல்லும் சாலையில் அமைந்துள்ள இவ்வூரின் வடக்குப் பகுதியில் கிடைக்கின்ற கறுப்பு சிவப்பு பானை ஓடுகளிலிருந்து இவ்வூர் சங்ககாலப் பழமை உள்ள பகுதி என்பது தெளிவாகிறது. இவ்வூர் பிற்காலப் பாண்டியர் காலத்தில் மதுரோதைய வளநாட்டிற்குட்பட்ட கருநிலக்குடி நாட்டுப் பகுதிக்குள் அமைந்திருந்த குலசேகரச் சதுர்வேதி மங்கலத்தின் தென் பிடாகையாக விளங்கியுள்ளது. இவ்வூரிலுள்ள கைலாசநாதர் கோயிலாகிய சிவாலயம், பன்னிரெண்டாம் நூற்றாண்டளவில் ஆயிரத்தெண்மீசுவரமுடையார் கோயிலென்ற பெயரில் சிறப்புடன் விளங்கியுள்ளது. குலசேகர பாண்டியனின் ஆட்சிக்காலத்தில் (கி.பி.1195) வீரபத்திர நல்லூர் பகுதி இக்கோயிலுக்குரிய தேவதானப் பகுதியாக இருந்துள்ளது. குலசேகரச் சதுர்வேதி மங்கலத்துச் சபையார் திருமடைப்பள்ளிப்புறமாக இக்கோயிலுக்கு விற்றளித்துள்ள பகுதி குறித்து ஒரு கல்வெட்டு குறிப்பிடுகிறது. இவ்வூரிலுள்ள இலட்சுமி நாராயணப் பெருமாள் கோயிலிலுள்ள முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியனுடைய கல்வெட்டொன்று வீரபண்டித விண்ணகர் எம்பெருமான் என்ற பெயரில் பெருமாள் கோயில் கட்டப்பட்டதைக் குறிப்பிடுகிறது.

**ஈஞ்சார்**

சிவகாசி வட்டத்திலுள்ள மங்கலம் உள்வட்டத்தில், சிவகாசிக்கும் ஸ்ரீவில்லிபுத்தூருக்குமிடையில் அமைந்துள்ள ஈஞ்சார், கல்வெட்டுகளில் தடங்கண்ணிச் சிற்றூர் எனச் சுட்டப்பட்டுள்ளது. அர்ச்சுனா நதிக்கரையில் கிடைக்கும் நுண்கற்கருவிகளும், இவ்வூரின் வயல்பரப்புகளில் கிடைத்து வரும் கறுப்பு சிவப்புப் பானை ஓடுகளும் இவ்வூரின் தொன்மைக்கான சான்றுகள்.

இவ்வூரிலுள்ள சிவாலயம் சோறன் உய்ய நின்றாடுவான் குருகுலத்தரையனால், அவனுடைய மன்னன் மாறவர்மன் சுந்தரபாண்டியன் பெயரில் கட்டப்பட்டுள்ளமையை அக்கோயில்

மகாமண்டபத்தில் மேற்குச் சுவரிலுள்ள கல்வெட்டொன்றிலிருந்து தெரிந்து கொள்ள முடிகிறது. இக்குருகுலத்தரையன், தடங்கண்ணிச் சிற்றூராகிய ஈஞ்சாரைச் சேர்ந்தவர் என்பதும், இவரே திருத்தங்கலில் சிவாலயத்திலும், பெருமாள் கோயிலிலும், திருப்பணி மேற்கொண்டவர் என்பதும் குறிப்பிடத்தக்கது.

சிவன் கோயில் அருகில் சாலை ஓரத்திலுள்ள செக்கொன்றில் காணப்படும் கல்வெட்டிலிருந்து அச்செக்கானது கி.பி.பதினொன்றாம் நூற்றாண்டளவில் வாண (விச்சா) திரனான எண்ணங்கலக்கியப் பேரரையன் என்பரால் செய்தளிக்கப்பட்டுள்ளமையைத் தெரிந்து கொள்ளமுடிகிறது.

**எதிர்க்கோட்டை**

சிவகாசிக்கும் வெம்பக்கோட்டைக்கும் நடுவிலமைந்துள்ள எதிர்க்கோட்டையில் முற்காலப் பாண்டியர் காலத்தைச் சேர்ந்த சைவ, வைணவ ஆலயங்கள் உள்ளன. மிகுதியாகப் பருத்தி விளையக்கூடிய எதிர்க்கோட்டைப் பகுதியில் பத்தாம் நூற்றாண்டளவிலேயே துணி வணிகர்கள் இருந்துள்ளனர். அறுவை வணிகச்சேரியைச் சேர்ந்த ஆச்சன் என்பவர் கூத்தங்குடி, சுனைக்குடி படாரர் கோயிலில் நந்தா விளக்கெரிக்க வேண்டி ஐம்பத்தைந்து ஆடுகளைக் கொடையாக அளித்துள்ளதைத் தெரிவிக்கும் கல்வெட்டு இவ்வூரில் அறுவை வணிகச்சேரி அமைந்திருந்ததை உறுதிப்படுத்துகிறது. வேணுகோபால சுவாமி திருக்கோயிலிலுள்ள முதலாம் இராசராசசோழனின் கல்வெட்டொன்று கூத்தங்குடி நகரத்தார் வழங்கியுள்ள நிலக்கொடையைக் குறிப்பிடுகிறது. இராசராசசோழன் காலத்தைச் சேர்ந்த மற்றொரு கல்வெட்டு திசையாயிரத்தைஞ் நூற்றுவர் என்ற வணிகக் குழுவினர் வழங்கியுள்ள கொடையைக் குறிப்பிடுவதாகத் தோன்றுகிறது. மேற்குறிப்பிட்டுள்ள செய்திகளனைத்துமே சற்றேறக்குறைய ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் எதிர்க்கோட்டைப் பகுதியில் வணிகர்களின் செயல்பாடுகள் மிகுந்திருந்தமையை உறுதிப்படுத்துபவையாக உள்ளன.

**கொத்தனேரி**

விருதுநகரிலிருந்து ஆமத்தூர் வழியாக வெள்ளூர் செல்லும் சாலையில் அமைந்துள்ளது.

இவ்வூருக்கு வெளியில் பதினெட்டாம் நூற்றாண்டு நினைவுக்கற்கள் உள்ளன. ஒரு கல்லில் கோபால நாயக்கர் என்ற வீரனின் உருவம் கையில் கத்தியுடன் செதுக்கப்பட்டுக் கல்லின் மேற்பகுதியில் பெயர் பொறிக்கப்பட்டுள்ளது. மற்றொரு கல்லில் சுப்பையா நாயக்கர் என்ற வீரனின் உருவம் அஞ்சலித்த நிலையில் செதுக்கப்பட்டு, தலைக்கு மேல் வீரனின் பெயர் பொறிக்கப்பட்டுள்ளது. பிறிதொரு நினைவுக்கல்லில் கவுண்டம்பட்டியைச் சேர்ந்த மாரியப்பன் என்பவரின் துணைவியார் செல்லத்தம்மாளின் உருவம் அஞ்சலித்த நிலையில் செதுக்கப்பட்டுப் பெயரும் பொறிக்கப்பட்டுள்ளது. அடுத்தொரு கல்லில் கவுண்டம்பட்டியைச் சேர்ந்த முத்தப்ப நாயக்கரின் மகன் கோபால நாயக்கரின் மனைவி சின்னமாரியம்மாளின் உருவமும் பெயரும் பொறிக்கப்பட்டுள்ளன.

**மானகச்சேரி.த.**

தடங்கண்ணி மானகச்சேரி என்றழைக்கப்படும் இவ்வூர் ஸ்ரீவில்லிபுத்தூர் சிவகாசி சாலையில் அமைந்துள்ளது. இவ்வூரில் ஒரு கிணற்றினருகிலுள்ள ஆசிரியம் கல்வெட்டிலிருந்து வீரபண்டித ஈசுவரமுடையார் கோயிலின் தேவதானமான குலசேகரபுரம் என்ற வணிக நகரில், வெண்பில் நாட்டார், கருநிலக்குடி நாட்டார், இருஞ்சோ நாட்டார், ஆரி நாட்டார், வெண்பைக்குடி நாட்டார், திருமல்லி நாட்டார் ஆகியோர் இணைந்து மேற்கொண்ட பாதுகாப்பைத் தெரிந்து கொள்ளமுடிகிறது.

**சோழபுரம்**

ஸ்ரீவில்லிபுத்தூர் திருநெல்வேலி சாலையில், ஸ்ரீவில்லிபுத்தூரிலிருந்து சுமார் 20 கி.மீ., தொலைவில், உத்தமசோழச்சதுர்வேதி மங்கலமான சோழபுரம் அமைந்துள்ளது. இவ்வூரில் ஓடும் தேவியாற்றின் கரையில் கிடைத்து வரும் நுண்கற்கருவிகள் இப்பகுதியின் தொன்மைக்கு மிகச்சிறந்த சான்றுகள் எனலாம். மேலும் இப்பகுதியில் கிடைத்துவரும் கருப்பு சிவப்புப் பானை ஓடுகளும் முதுமக்கட் தாழிகளின் பகுதிகளும் இப்பகுதியின் தொன்மையை உறுதி செய்கின்றன. இவ்வூரில் உத்தமசோழ விண்ணகராழ்வாரான வெங்கடாசலபதி பெருமாள் கோயிலும், விக்கிரம பாண்டீசுவரமுடையாரான சிவன் கோயிலும் உள்ளன. சிவாலயத்தின் வெளித்திருச்சுற்றிலுள்ள கோபுர நுழைவாயிலானது பிற்காலப் பாண்டிய வேந்தன் சுந்தரபாண்டியனின் பெயரால் அமைக்கப்பட்டுள்ளது. உள்திருச்சுற்றின் நுழைவாயிலான கோபுரம் தம்பிக்கு நல்லான் திருவாயில் என்ற பெயரிலுள்ளது. இரண்டாம் கோபுர நிலைக்கால் உதையன் உடையானான சுந்தரபாண்டியப் பல்லவரையன் என்பவர் பெயரால் அமைக்கப்பட்டுள்ளது. இத்திருக்கோயிலிலுள்ள நடராசர் மண்டபத்தின் முன்னுள்ள மண்டபம் பிரம்பிலூரைச் சேர்ந்த பெரியான் பெருமாளான வேணாவுடையரால் கட்டப்பட்டுள்ளது. இம் மண்டபத்திலுள்ள தூண்களைச் சோழகுலாந்தகபுரத்து சடைய மந்திரிகள், நாங்கூரைச் சேர்ந்த சோதி சூற்றியானான சுந்தரப் பெருமான், தன்மபாலன், பள்ளி சூரியனான சோமன் தேவன், நாங்கூரைச் சேர்ந்த சாமந்தனான, சேலன், அரசூரைச் சேர்ந்த உய்யநெறிகாத்தானான உதையன் உமையான் போன்ற பலரும் செய்தளித்துள்ளனர். இவர்களுள் கோநாங்கூரைச் சேர்ந்த பட்டரான தனபாலன் என்பவர், இறைவன் அவருடைய பிரார்த்தனையை நிறைவேற்றி, அவருக்கு மகன் பிறக்கச் செய்தமைக்கு இறைவனுக்கு நன்றி செலுத்தும் விதமாக ஒரு தூணைச் செய்தளித்தள்ளதாக அத்தூண் கல்வெட்டு தெரிவிக்கிறது. இறையருளால் பிறந்த அவர் மகனுக்கு உடம்பிறப்பிழகியான் என்ற பெயரைச் சூட்டியதாகவும் அக்கல்வெட்டு புலப்படுத்துகிறது. சோழபுரம், முடிவழங்கு பாண்டியன், குன்றத்தூர், இரண்டு சொல்லாதான், சேதுராமகுறிச்சி, சாமந்த கண்டன் வீரசிங்க நல்லூர், பாண்டியதேவ குறிச்சி போன்ற பல்வேறு ஊர்களில் விற்கப்படுகின்ற புடவை ஒன்றுக்குக் காணிப் பணத்தைக் ($^1/_{80}$) கோயிலுக்குத் தானமாக வழங்கி, அதன் மூலம் விக்கிரமபாண்டீசுவர முடையார் கோயிலில் கட்டடப் பராமரிப்புத் திருப்பணிகளை மேற்கொண்டுவர மேற்குறித்த ஊரார் மேற்கொண்ட முடிவை ஒரு கல்வெட்டிலிருந்து தெரிந்து கொள்ள முடிகிறது.

தென்காசிப் பாண்டியமரபைச் சேர்ந்த குலசேகர பாண்டியனின் கல்வெட்டொன்றிலிருந்து (கி.பி.1561), மதுரையிலுள்ள திருவாலவாயுடையார் திருக்கோயிலில் மாடாபத்தியமாகப் பணியாற்றிவந்த ஊருடைய முதலியான வீரபாண்டிய சூடிக்கொடுத்த முதலி என்பவர், இளவரசர் அழகன்பெருமாள், அதிவீரராமனின் விருப்பப்படி, வீரபாண்டிசுவரமுடையார் கோயிலில் கோயிற்கணக்கராகப் பணியில் அமர்த்தப்பட்டதை ஒரு கல்வெட்டு புலப்படுத்துகிறது. தென்காசிப் பாண்டிய மன்னனான குலசேகர பராக்கிரம பாண்டியனின் (கி.பி.1573) கல்வெட்டொன்று வாசு தேவநல்லூர் கோயில் கைக்கோளரான அழகர் என்ற பட்டர் ஒருவர், விக்கிரம பாண்டீசுவரமுடையார் கோயிலில் மாடாபத்தியமாக நியமிக்கப்பட்டதைத் தெரிவிக்கிறது. இவருக்கு இப்பணிக்காக வேண்டி இரண்டு மா நிலம் மாடாபத்தியக் கணக்குக் காணியாட்சியாக பரம்பரை பரம்பரையாக அனுபவிக்கத்தக்க வகையில் வழங்கப்பட்டிருந்ததையும் இக்கல்வெட்டிலிருந்து தெரிந்து கொள்ள முடிகிறது.

ஆரிநாட்டுத் தனியாணைச் சதுர்வேதிமங்கலத்து மகாசபையார் சக்கனேரிப் பகுதியில் சில நிலங்களைக் காராண்மைச் சென்மமாக சூரியதேவன் தம்பிக்கு நல்ல பெருமாளான பிள்ளை சுந்தரபாண்டிய வாணகோவரையருக்கும், வாடாக்கடமையாக விக்கிரமபாண்டீசுவரமுடையார் கோயிலுக்கும் விற்றளித்த செய்தி ஒரு கல்வெட்டிலுள்ளது. சக்கனேரிப் பகுதியிலிருந்த நிலங்களைப் பாண்டியமன்னன் (கோனேரின்மை கொண்டான்) சுந்தரபாண்டிய வாண கோவரையரிடமிருந்து கற்பூரவிலையாக 1000 பணத்திற்கு வாங்கி, அந்த நிலங்களின்

வருவாயிலிருந்து 100 பொன் கொண்டு, கோயிலின் தினசரி வழிபாடுகளையும், மன்னன் பெயரில் ஏற்படுத்தப்பட்ட விழாவினையும் நடத்திட வழிவகை செய்யப்பட்டிருந்தது.

இங்ஙனம் மாறவர்மன் விக்கிரபாண்டியனின் (கி.பி.1250 - 78) பெயரில் சிறப்புமிக்க சிவாலயமாக விளங்கிய இத்திருக்கோயில் போலவே இரண்டாம் குலோத்துங்கனின் சிறப்புப் பெயர்களுள் ஒன்றான உத்தமசோழன் என்ற பெயரில் உருவான உத்தமசோழவிண்ணகரமாகிய வெங்கடாசலபதி கோயிலும் தனிச்சிறப்புடன் திகழ்ந்து வருகிறது. சிவாலயத்திற்கு தென்மேற்கில் அமைந்துள்ள இப்பெருமாள் கோயிலில் அந்தராள மண்டபம், மகாமண்டபம், சோபானம் போன்ற பகுதிகளைக் களத்தூரைச் சேர்ந்த வீரன் கலங்கரியானான வேணாவுடையார் என்பவர் கட்டியுள்ளமையைக் கல்வெட்டொன்றிலிருந்து தெரிந்து கொள்ள முடிகிறது. இத்திருக்கோயிலில் சேர நாராயணன் திருமண்டபத்தில் மேற்கொள்ளப்பட்ட திருப்பணியைக் கல்வெட்டொன்று புலப்படுத்துகிறது. வெள்ளையறை நல்லூர், திருச்சேலூர், அமன்புத்தூர், கொண்டையநேரி, உபநயனமங்கலம் போன்ற பல கிராமங்கள் இப்பெருமாள் கோயிலுக்கு வழங்கப்பட்டிருந்துள்ளன. மன்னார் மற்றும் நாச்சியார் திருமேனிகளின் வழிபாடுகளுக்காக வேண்டி திருவிடையாட்ட இறையிலியாக இக்கோயிலுக்கு எம்மண்டலமும் கொண்டருளிய குலசேகரபாண்டியன் காலத்தில் நிலக்கொடை வழங்கப்பட்டுள்ளது.

### முதுகுடி

இராசபாளையம் சோழபுரம் சாலையில் இராசபாளையத்திலிருந்து சுமார் ஆறு கி.மீ. தூரத்திலமைந்துள்ள முதுகுடியில் பாண்டிய மன்னன் முதலாம் மாறவர்மன் குலசேகரபாண்டியனின் 34ஆம் ஆட்சியாண்டைச் சேர்ந்த நடுகல் கல்வெட்டொன்றுள்ளது. (கி.பி.1302). இவ்வூருக்கு வடமேற்கிலுள்ள கருங்குளத்தில் உடைப்பு ஏற்பட்டபோது, அக்குளத்தின் பாதுகாப்புப் பணியிலிருந்த பெரிய தேவப் பள்ளன் என்பவர் பாதுகாப்புப் பணியிலீடுபட்டு ஊர்மக்களைக் காக்க உயிர் நீத்த வீரத்தைப் பாராட்டி இந்நடுகல் எடுக்கப்பட்டுள்ளது. இவ்வீரனின் மகளுக்கு அரைமா நிலம் உதிரப்பட்டியாகவும் வழங்கப்பட்டுள்ளது.

### புதுப்பாளையம் (இராசபாளையம்)

இன்று இராசபாளையத்தின் ஒரு பகுதியாக விளங்கிவரும் புதுப்பாளையம் பகுதிக்குக் கி.பி. பதின் மூன்றாம் நூற்றாண்டளவில் கருங்குளம் என்றும் சாதவாசகநல்லூர் என்றும் பெயர்கள் வழங்கி வந்துள்ளன. இங்குள்ள பரன்னங்காத்தருளிய சுவாமி திருக்கோயில் கி.பி.13ஆம் நூற்றாண்டளவில் கட்டப்பட்டுள்ளது. இராசவல்லிபுரத்தைச் சேர்ந்த ஒருவாருணர்ந்தான் எனக்கு நல்லபெருமாள் என்பவரின் பெயரால் இங்கு எனக்கு நல்லபெருமாள் மடம் என்ற மடமொன்று செயல்பாட்டிலிருந்துள்ளது. இரண்டாம் சுந்தரபாண்டியனின் கல்வெட்டொன்றிலிருந்து (கி.பி.1248 - 49) திருவாரூர் கிருஷ்ணகோளகி மடத்தலைவரின் சீடரான ஈசானதேவருக்கும், எனக்கு நல்லபெருமாள் மடத்திலுள்ள சீடர்களுக்கும் வேண்டி மன்னன் மடப்புறமாகப் பன்னிரண்டு மா நிலம் வழங்கியிருந்தமையைத் தெரிந்து கொள்ள முடிகிறது. வேறு சில கல்வெட்டுகளும், இம்மடத்திற்கு வழங்கப்பட்டிருந்த நிலவிபரங்களைக் குறிப்பிடுவனவாகக் காணப்படுகின்றன. இவற்றிலிருந்து கி.பி.13ஆம் நூற்றாண்டளவில் இந்த மடம் மிகச் சிறப்பான நிலையிலிருந்துள்ளமையைத் தெரிந்து கொள்ள முடிகிறது. பறவை அன்னங்காத்தர் கோயிலின் (பரன்னங்காத்தார் கோயிலின்) கருவறை நுழைவாயிலிலுள்ள கல்வெட்டிலிருந்து அந்த நிலைக்காலையும், படியையும் வாள்வல்ல பாண்டியதேவன் என்பவர் செய்தளித்துள்ளமையைத் தெரிந்து கொள்ள முடிகிறது. ஸ்ரீவல்ல பாண்டியனின் கல்வெட்டொன்றிலிருந்து (கி.பி.1297) இக்கோயிலுக்கு வழங்கப்பட்டிருந்த நந்தாவிளக்குக்கான கொடை பற்றி அறிந்து கொள்ள முடிகிறது.

**தேவதானம்**

மதுரை செங்கோட்டை சாலையில் இராசபாளையத்திலிருந்து 16 கி.மீ. தொலைவில் அமைந்துள்ள தேவதானம் நுண்கற்காலத்திலிருந்தே வரலாற்றுச் சிறப்புடைய பகுதியாகத் திகழ்ந்து வருகிறது. இவ்வூரின் மேற்குப் பகுதியில் நெடும்பரம்பில் காணப்படும் முதுமக்கள் தாழிகள் இவ்வூரின் தொன்மை வரலாற்றிற்குச் சான்றாகின்றன. செம்மரமான குலசேகரபுரம் என்ற பெயரில் கல்வெட்டுக்களில் சுட்டப்படும் இவ்வூரில் அமைந்துள்ள சிவாலயத்திறைவனைக் கல்வெட்டுகள் உடையார் பகவான் பாறை ஆளுடைய நாயனார் என்றழைக்கின்றன. பிற்காலக் கல்வெட்டுகளில் இவ்விறைவன் நச்சாடை தவிர்த்தருளிய நாயனார் என்று சுட்டப்பட்டுள்ளார். முற்காலப் பாண்டியர் காலத்தில் கட்டப்பட்டு கி.பி.13 ஆம் நூற்றாண்டளவில் திருப்பணி செய்யப்பட்டுள்ள இச்சிவாலயத்தில், பாண்டிய மன்னன் ஸ்ரீவல்லபன் ஆகவராமன் சந்தி என்ற பெயரில் சிறப்பு வழிபாட்டினை ஏற்படுத்தித் தேவதானமாக கண்டன்குளம் பகுதியில் நிலமுமளித்துள்ளார். தென்காசிப் பாண்டியர் மரபைச் சேர்ந்த பராக்கிரம பாண்டியன் இக்கோயிலில் காலை சந்திபூசையை ஏற்படுத்தி அதற்கான செலவினங்களுக்காக வேண்டி கண்டங்குளம் பகுதியில் நிலமும் அளித்துள்ளார்.

தென்காசிப் பாண்டியர் மரபைச் சேர்ந்த குலசேகர பாண்டியனின் கல்வெட்டொன்று (கி.பி.1554) இக்கோயிலில் மதுரை ஆலவாயுடையார் கோயிலைச் சேர்ந்த ஊருடைய முதலியாரான வீரபாண்டி தேவர் என்பவர் மாடாபத்யக் கணக்கராக நியமிக்கப்பட்டு, அப்பணிக்காக அவருக்குக் காணியாட்சியாக நிலமும் வழங்கப்பட்டிருந்ததைக் குறிப்பிடுகிறது.

இங்ஙனம் இத்தொகுதியில் இடம்பெற்றுள்ள கல்வெட்டுக்களிலிருந்து இப்பகுதி தொடர்பான அரசியல், சமய, சமுதாய மற்றும் பொருளாதாரம் தொடர்பான வரலாற்று நிகழ்வுகளைத் தெரிந்து கொள்ள முடிகிறது.

# INTRODUCTION

As a result of the Intensive Epigraphical compaign, launched by the commissioner of Archaeology, the department has already published the first volume of inscriptions of the Virudhunagar district in which the inscriptions deciphered from Aruppukkottai, Thirucchuliyal, Kariyappatti, Virudhunagar, and Sattur taluks are included. In continuation of that first volume, in this second volume, Inscriptions noticed from certain areas in virudhunagar, Sivakasi and Rajapalayam taluks are included. These inscriptions throw light on the political, cultural, ecomnomical, religious and art history of this area.

## SORAMPATTI

There is a memorial stone in the shiva temple at Sorampatti village located near the road that leads to Muthulingapuram village, which was installed in memory of a certain Kudiyan Kuricchan, who hailed from Thisaisudarmanimangalam, in Karunilakkudinadu and it is datable to 12th century A.D.,

## KARISERI

Here in this village, there is an oil press (chekku) in front of the Lakshminarayanaperumal temple, donated by a certain Veerathacchan, native of Ari yanvilmadai, on behalf of an one ' Srikari ', in 12th century A.D.,

## THIRUTTHANGAL

The antiquity of the human settlement at Thirutthangal , located very near to Sivakasi on the road that leads to Sivakasi from Virudhunagar, dates back to the microlithic period since we get a number of microlithic tools and Black and Red ware potteries from there . The location of this town on one of the ancient highways that linked the Chera country with Madurai the capital of the Pandyas also seems to be a good reason for the speedy development of this town as one of the popular centre of learning and as a result of this development, some poets of the sangam classics had hailed from this town. As portrayed in Silappadhikaram, Parasaran, a learned brahmin, on his way back from the Cheranadu is said to have stayed at this town, which proves beyond doubt that Thirutthangal was a popular town during the period of great epics.

Here in this town at the bottom of the hillock there is a rock cut cave temple dedicated to vishnu which can be dated to eighth century A.D., In this rock cut cave the image of Pallikondaperumal is carved ( vishnu in the reclaining posture)

Number of inscriptions have been copied from Nindranarayanaperumal temple, which was constructed on the top of the hillock during the Early Pandya period and then renovated in the 13th century and again rebuilt most probably during the Nayak period . Among the insriptions copied from this south facing temple, the earliest one is engraved in Vetteluthu characters and it dates back to the period of Varuguna Pandya I. The antiquity of this temple is further attested by the hymns of the Alwars, Bhutathalvar and Thirumangai Alwar.

Tadanganni chitrurudaiyan Choran Uyyanindraduvan alias Gurukulatharaiyan , an official of Maravarman Sundhara Pandya I, had shown keen interest in the upkeeping of this temple, and took up the rebuilding of the garbagraha of this temple. Further he had made some land endowments to meet out the expenses of the special pujas instituted in his name and in the name of his master SundaraPandya I. An inscription of Kulasekara pandya records the contruction of the Thiruvarangadevan Thirumandapam in the prakara of this temple, and the land endowments made for the puja expenses of the deity Narasimma installed in this temple. A small mandapa by name ' Sukravarakuradu' was constructed in this temple around 1885 A.D., by Rengasamy Naicker, who was a Zamindar of Nagalapuram for Friday pujas. Certain building activities of this temple like the Mukamandapam, wooden shed of Manavalamuni shrine, Garudamandapam, mukamandapam of the Renganathan shrine were carried out by the trustboard during the early phase of the 20th century.

Special pujas were conducted in this temple on the day of Vaikasi vishakam . For this purpose two brothers namely Thiruvarangadevan Kundreduthan and his younger brother Thiruvarangadevan uyyak kolvan had made some land endowment during the period of Sundara Pandya (1221A.D.,) During the Avani festival, special ghee abhishekam (Neyyadal) was made to the deity. To meet out the expenses of this special annointment certain Atthiraiyan Kundredutthan Srivallaban had made an endowment of land during the period of Sundara Pandya ( 1216- 1239 A.D., ) The idol was taken out in procession on New moon days (Ammavasai). For this purpose certain land endowment was made during the period of the chola king Kulotthungachola I

Ladies also have contributed a lot to the welfare of this temple. Sadagopan Thirunangai wife of Uyyanindraduvan alias Kalingarayan, a native of Andhanur in Mutthutrukkurram seems to have made some land gift to the God and Goddess . during the period of kulasekara pandya. Thirumangaiyandal wife of Uyyanindraduvan alias udayan kalingarayan, a native of Anthanur Sirukambur located within Mutthuttruk kurram, had made certain land endowment to meet out the expenses of maintaining the tank which yielded flowers for the worship of God. Two ladies, one by name Atkondi, wife of Thiruvarangadevan and another by name Thirumakal wife of Suriyanarayanan had made endowment of sheep. Kotranacchiyar, a wife of Asipattanarayanan, a resident of Thirutthangal had endowed a perpectual lamp.Uyyavandhal wife of Ponnalakiyan, a native of Srivanavanmadevicchathurvedimangalam, in Venbunadu had donated for a ' Sandya deepam'. The above mentined gifts made during the Later Pandya period, clearly prove that ladies too had played an important role in the development of this temple .

As per the political geography noticed from the inscriptions, Thirutthangal was a Devadhana Brahmadheyam in Karunilakkudinadu, in Madhuroadhaya valanadu of Sri Pandi Nadu. This brahmadheya settlement was administered by the brahmin sabha 'Mulaparushai'. This locality was well irigated by certain tanks like Davendharavallabhappereri and Nindranarayanappereri.

On the top of the hillock, on the eastern side to this vishnu temple there is shiva temple also. This temple popularly known as Karunellinathaswamy temple was built in stone for Thangal Isar and his consort Gauri by Soran Uyyanindraduvan alias Gurukulattharaiyan of Thadankannichitrur. An inscription found in the southern wall of the

this shiva from becoming a Bhiksatana to beg for his daily bowl of bali, by instituting a special service and making provisions for food offerings to the deity. From an iscription engraved in the north wall of the central shrine of this temple we come to know that a certain Kumararangappa Nayakkar had gifted 1/4 share of the Udaippankulam village to this temple, for the purpose of meeting out the puja expenses of both shiva and Amman.

A hero stone inscription also has been copied from Thirutthangal which records the 'ratthakkani' donated in praise of a certain Ullibomman Kalangatha Kandanayakkar's blood sacrifice. This inscription further records that he was a servant of Varadhungarama Thanippuli kalangatha kandanayakkar. This record can be dated back to 17-18th century A.D.,

## MANGALAM

From the availablity of Black and Red ware potteries and Iron age implements from the village Mangalam, which is located in between Sivakasi and Kirisnankoyil, we can safety say that this area was a sangam period settlement area.As per the political division of the Later Pandyas, this village was a southern hamlet of Kulasekaracchathurvedi mangalam, located within Karunilakkudi nadu in Madhurodhaya valanadu. The shiva temple, ( the Kailasanathar koyil), is in existence from the 12th century A.D., and during that period this temple was popularly known as 'Ayirathenmisvaramudaiyar' temple. Veerapathiranallur was a devadhana of this temple during the period of KulasekaraPandya (1195 A.D.,). An endowment made as 'Thirumadaippallipuram' to this temple by the Sabha of Kulasekaracchaturvedimangalam is recorded is one of the inscriptions. we come to know about a vishnu temple by name 'Veerapanditha Emperuman' from an inscription dating back to the period of Maravarman Sundarapandya I.

## INJAR

Archaeologically the antiquity of the settlements of Injar, which is located in between Sivakasi and Srivilliputhur, dates back to the microlithic period, since from a mound located west of the shiva temple, microlithic tools, Black and Redware potteries, and urns are available. The shiva temple of this village was constructed by Soran Uyyanindraduvan alias Gurukulatharaiyan and was named after his king Maravarman Sundarapandya I( AD 1216- 1238). This Gurukulatharaiyan was a native of this village Injar, which was otherwwise called by the name Thadankkannichitrur as noticed in the Later Pandya inscriptions. The same Gurukulatharaiyan had keenly taken part in the constrution works of both Shiva and Vishnu temples at Thirutthangal also. Near the shiva temple on the road side an oil press is found with an inscription which can be dated back to eleventh century.The inscription records that that oil press was installed by certain Vanavichadhiran alias Yennankalakkip peraiyan.

## YEDHIRKKOTTAI

At Ethirkkotai, in the cottan producing belt of Virudhunagar region, located in between Sivakasi and Venbakottai, we have both siva and vishnu temples datable to the Early Pandya period. This village was a popular centre of the textile merchants as early as

Ardhamandapa of this temple states that the above said Gurukulattharaiyan had prevented tenth century itself and a certain Acchan of that Aruvaivanikacchri had made an endowment of fiftyfive sheep to the temple of Kutthankudi Sunaikkudi Padarar, for burning a perpetual lamp. An inscription at Venugopalaswamy temple dating back to the period of the great chola king Rajaraja I (1006A.D.,) records certain land donation made by the Nagaratthar of Kutthankudi, Another inscription of Rajaraja period also records an endowment most probably by the merchant guild Thisaiyayiratthainnutruvar for the drummers. The above said inscriptions are good proof for the fact that this village was an important merchantile centre of this region.

## KOTTHANERI

At Kotthaneri, some memorial stone inscriptions are found outside the village .One slab was installed in memory of a certain Gopalanayakkar whose image is depicted with a sward in his hand. Another stone inscription records the name of a certain Subbaiya Nayakkar whose image is noticed in the anjali pose. Other two memorial stones were erected in memory of certain ladies. Cellatthammal wife of Mariyappan hailed from Kavundampatty, and chinnamariammal wife of Gopalanayakkar son of Mutthappa Nayakkar belonging to Kavundampathy village were remembered by these memorial stone.

## MANAKACCERY(T)

Thadankanni Manakaccheri popularly known as T. Manakaccheri is located in between Sivakasi and Srivilliputhur. An inscription datable to 13th A.D., noticed near a well of this village records that Venbilnattar, Karunilakkudinattar, Irunjonattar, Arinattar, Venbaikudinattar and Thirumallinattar collectively took steps of protection (Asiriyam) . Below the text of this inscription certain tools have been carved. Another inscription of the same period noticed near the Irulappaswamy temple records the pretection given to Kualsekarapuram by a local cheif known by the name Perumal Atkondapillai Malai kathakandar.

## CHOLAPURAM

Utthamacholachadhurvedimangalam now popularly known as Cholapuram is located at a distance of 20 kms from Srivilliputhur on the road from Srivilliputhur to Thirunelveli. Since we get microlithic tools on the banks of Devi river, it is clear that this place had human settlements from that early period itself. Further the availability of Black and Redware potteries and megalithic urnburials in this area, prove beyond doubt the presence of Sangam period settlements in this area. Here in this village both shiva ( Vikkiramapandisvaramudaiyar temple) and vishnu temples ( Utthamachola vinnagar alwar alias Venkadajalapathy temple)are notable ones. The outer entrance of the shiva temple was built by the name of the Pandya rular Sundarapandya and the inner entrance was built by the name 'Thambhikku Nallan Thiruvayil'. The door jamb of the second gopura was built by Udhaiyan udaiyan alias Sundarapandyappallavarayan. The stone mandapa located in front of the Natarajar mandapam was built by certain Periyan perumal alias Venavudaiyar of Pirambilur. The stone pillars of this mandapa were donated by a number of individuals. Sadaiya mandhirikal of Cholakulandhakapuram, Sothisutriyan alias

Sundarappperumal a native of Nangur, Dhanmapalan, Pallisuryan alias Soman Devan from Nangur, Selan of Arasur and Uyyaneri katthan alias Udaiyan Umaiyan were certain donars traceable from the inscriptions. Among the donars of the pillars certain Bhattan by name Dhanabalan who is said to have hailed from Konangur made this donation as a votive offering, to thank God for having blessed him with a son whose name is recorded in the inscription as Udanpirappalagiyan. Certain tax was levied on the sale of garments sold in Cholapurm ,Mudivalangupandian, Kundratthur, Irandu sollathan, Sethurama kurichi, Samandhan kandanveerasinganallur, and Pandyadevakuricchi and that tax amount was donated to the temple . The amount collected by this donation was utilished for the maintenance of the temple building sturctures and for the repair works as per the decision taken by the above said villagers.

An inscription dating back to Kulasekara pandya (1561 AD)of Thenkasi pandya dynasty records that a certain Urudaiya mudhali alias Veerapandi Sudikkoduttha Mudhali,who was a madappathiyam of Thiruvalavayudaiyar koyil at Madurai, was appointed as the temple accountant of Veerapandisvaramudaiyar temple as per the orders of the prince Alaganperumal Adhiveeraraman. According to another inscription of Kulasekaran alias Parakirama pandiyan (1573AD) of the same dynasty, a certain Bhattar, Alagar a kaikkola of the Vasudevanallur temple was appointed as the Madappathiyam in the Vikkiramapandisvaramudaiyar temple, and for his service he was given 2 ma of land that can be utilized hereditorily by his family.

An inscriptions of Jatavarman Parakirmadeva ( 1322 A.D.,) records a sale of land comprising certain Sakkaraneri, which was located on the southern quarter of Thaniyanai Virapandia chathurvedimangalam, a Brahmadeya in Arinadu, as Karanmaicchenmum to a certain Suriyadevan Thambikku Nalla perumal alias Pillai Sundarapandya vanakovaraiyar an Akapparivara Mudhali of the ruler hailed from Arukkkaikundrathur in Anmanadu and as Vadakkadamai to the Cholapuram Shiva temple by the mahashabhai of the above said Chathurvedhmangalam. Another inscription records the grant of a certain land by the king (Konerinmaikondan) to this shiva temple, after purchasing it from Sundarapandya Vanakovaraiyar as Karpuravilai for a sum of 1000 panam. to meet out the expenses of a festival instituted after the name of the king and the expenses of food and other offerings of the daily worship. In this manner the shiva temple built in the name of Maravarman Vikkiramapandiyan (1250-78A.D.) was a popular saivite religious centre in this area.

The Venkadachalapathi temple built in the name of the Kulothunga chola - II was popularly known in this area by the name Uthama Chola Vinnagaram during thirteen century.

An inscription records that a certain Veeran Kalankariyan alias Venavudaiyar had built certain portions of this temple. A mandapa by name Cheranarayanam Thirumandapam also was built within the temple in the thirteenth century. From the inscription it is also known that villages like Velliyarai nallur, Thirucchelur, Amanputhur, Kondaiyarneri, Upanayamangalam were granted to this Utthamachola Vinnagar Alwar temple. Certain land gift was made to this temple during the period of the Yemmandalamum Kondaruliya Kulasekara Pandya to the meet out the expenses of the worship of the Mannar and Nachiyar images of this temple.

## MUDHUKUDI

A hero stone inscription dating back to thirty fourth regnal year of Maravarman Kulasekara Pandya - I (1302 A.D.) has been noticed at Mudhukudi village which is located on the road from Rajapalayam to Cholapuram. The hero Periya Devapallan, a guard of Karunkulam tank, located northwest of Mudhukudi village, had sacrificed his life while protecting the villages from the floods that occured due to the embankment of the tank. In memory of his sacrifice this hero stone has been erected and 1/2 ma of land was donated to his daughter as Udhirappatti.

## PUDHUPALAYAM (RAJAPALAYAM)

Pudhuppalayam which is at present a part of the Rajapalayam Municipality was popularly known by the name Karunkulam alias Sadhavasaganallur around thirteenth century A.D.,. The Shiva temple of this area, Parannankattharuruliya swamy temple is in exsitence from the thirteenth century. Here in this village a mutt was established in the name of Oruvarunarndhan Yenakkunalla perumal a resident of Rajavallipuram. To feed the disciples of this mt, and Isana Dheva, who belonged to the Thiruvarur Krishna Glaki mutt, the Pandya ruler Maravarman Sundara Pandya II had donated twelve ma of land as madappuram. Some other inscriptions of this temple are also endowment records of land gifts to this mutt. From this it is clear that this mutt was very popular in this area during the later pandya period. From an inscription noticed in the lintel of the entrance we come to know that the doorframe and the steps of this temple were built by a certain Valvalla Panyadevan.

## DEVADHANAM

Devadhanam located on the highway from Madurai to Senkottai is a well known microlithic centre. The availability of a number of urn burials in this area is a good evidence for the sangam period settlements. The Shiva temple of this villages is locted near the foothills of the western ghats and that area is pointed out by the name Bhagavanparai of Semmaram alias Kulasekarapuram in Anmamadu. Hence the name of the deity as noticed in the early inscription is Udaiyar Thirubhagavanparai Aludaiyanayanar Sixteenth Century onwards the deity of this temple is popularly known by the name Nachadai thavittha Nayanar . This temple seems to have been constructed during the Early Pandya Period,and had undergone renovation during the thirteenth century. As noticed in the inscriptions Srivallaba Pandya had institued a special puja by name Akavaraman Sandhi and for the expenses of this special puja, he had endowed certain lands also to the temple. Parakrama Pandya had made certain land endowments to this temple to meet out expenses of a certain morning puja (kalai sandhi) instituted by him. Urudaiya Mudhali alias Veerapandiyathevar was appointed as Madapatthiyakanakkar (Accountant) around (1554-A.D.) He was brought to this temple from Alavayudaiyar temple at Madurai.

| த.நா.அ. தொல்லியல்துறை | | | தொடர் எண் : | | 220/2005 |
|---|---|---|---|---|---|

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மாவட்டம் | : | விருதுநகர் | ஆட்சி ஆண்டு | : | இல்லை |
| வட்டம் | : | விருதுநகர் | வரலாற்று ஆண்டு : | | கி.பி.12 ஆம் நூ.ஆ. |
| ஊர் | | சோரம்பட்டி | இந்தியக் கல்வெட்டு: ஆண்டு அறிக்கை | | |
| மொழி | : | தமிழ் | முன் பதிப்பு | : | |
| எழுத்து | : | தமிழ் | ஊர்க்கல்வெட்டு | | |
| அரசு | : | இல்லை | எண் | : | 1 |
| மன்னன் | : | இல்லை | | | |

இடம் : இவ்வூரிலிருந்து முத்துலிங்காபுரம் செல்லும் சாலையில் உள்ள ஈசுவரன் கோயிலில் நடப்பட்ட கல்.

குறிப்புரை : கருநிலக்குடி நாட்டுத் திசைச் சுடர்மங்கலத்து குடியன் குறிச்சன் என்பவன் நினைவாக நடப்பட்ட கல். இக்கல்லின் மேல்ப்பகுதியில் திரிசூலம் பொறிக்கப்பட்டுள்ளது.

## கல்வெட்டு

1. ஸ்ரீ கருநிலக்குடி
2. நாட்டு திசைச்
3. சுடர் மங்கல
4. த்துக் குடியந்
5. குறிச்சநுக்கு கூற்
6. செகுத்து தலைநீர்
7. அமிஞ்ச கல்

| த.நா.அ. தொல்லியல்துறை | | தொடர் எண் : | 221/2005 |
|---|---|---|---|
| மாவட்டம் : | விருதுநகர் | ஆட்சி ஆண்டு : | இல்லை |
| வட்டம் : | விருதுநகர் | வரலாற்று ஆண்டு : | கி.பி.12 ஆம் நூ.ஆ. |
| ஊர் : | காரிசேரி | இந்தியக்கல்வெட்டு: ஆண்டு அறிக்கை | |
| மொழி : | தமிழ் | முன் பதிப்பு : | |
| எழுத்து : | தமிழ் | | |
| அரசு : | பாண்டியர் | ஊர்க்கல்வெட்டு | |
| மன்னன் : | பாண்டியர் | எண் : | 1 |

**இடம் :** இவ்வூர் லெட்சுமி நாராயணப் பெருமாள் கோயில் முன்புள்ள செக்கு.

**குறிப்புரை :** வீரதச்சன் என்பவன் காரியின் பேரில் செய்த செக்கினைக் குறிக்கிறது.

**கல்வெட்டு**

1. ஸ்ரீ காரி பேரி

2. ல் அரியான்வி

3. ல் மடை வீரதச்

4. சன் [இடுவிச்ச] செக்

5. கு உ

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மாவட்டம் | : | விருதுநகர் | ஆட்சி ஆண்டு | : | 9 |
| வட்டம் | : | சிவகாசி | வரலாற்று ஆண்டு | : | கி.பி.1119 |
| ஊர் | : | திருத்தங்கல் | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : | 543 / 1922 |
| மொழி | : | தமிழ் | முன் பதிப்பு | : | |
| எழுத்து | : | தமிழ் | ஊர்க்கல்வெட்டு எண் | : | 1 |
| அரசு | : | பாண்டியர் | | | |
| மன்னன் | : | குலசேகரன் | | | |

இடம் : நின்ற நாராயணப் பெருமாள் கோயில் முன்மண்டபம் வடசுவர்.

குறிப்புரை : பாண்டியமன்னன் குலசேகரன் பெயரால் 'குலசேகரச் சதுர்வேதிமங்கலம்' என்னும் சதுர்வேதி மங்கலம் ஒன்று உருவாக்கப்பட்டதை இக்கல்வெட்டு குறிப்பிடுகிறது.

**கல்வெட்டு**

1. ஸ்வஸ்திஸ்ரீ பூவின்கிழத்தி மேவ வீற்றிருப்ப மேதினி மாதுநீதியிற் புணர போர்மடந்தை [த ஜய]
2. ப் புயத்திருப்ப மாக்கலை மடந்தை வாக்கினில் விளங்கத் திசையிரு நான் [கு] மிசை நிலா வெறி [ப்பமரை]
3. ற நெறிவளர மனு நெறி திகழ வற நெறிச் சமை யங்களாறுந் தழைப்பக் கான வேங்கையை வில் [லுடன்]
4. துரந்து மீனங் கனகாசனத்து வீற்றிருப்ப எண்கிரி சூழ்ந்து வேழ்கட [லே]லழ் பொழில் வெண் கு [டை...] நிழற்றச் செங்கோ
5. ல் நடப்ப கொடுங்கலி நடுங்கி நெடும் பிலத் தொளிப்ப வில்லவர் செம்பியர் விராடவர் பல்லவர் திறையுடன் [முறை...] முறை பணிய இருநேமிய
6. ளவு மொரு நேமி வோங்க வின்னமுதாகிய வியலிசை நாடக மன்னி வளர மணிமுடி சூடி விளங்கிய மணியணி வீரஸிம் [ஹா ஸனத்து...] வீற்றிருந்தருளிய
7. ஸ்ரீ கோச்சடைய பன்மரான திரிபுவனச் சக்ரவத்திகள் ஸ்ரீ குலசேகரதெவற்கு யாண்டு ஒன்பதாவது நாளிருநூற்றொருபத் தாறினால்
8. மதுரோதைய வளநாட்டு மாடக்குளக்கீழ் மதுரை க் கோயிற் பள்ளியறைக் கூடத்துப்பள்ளி
9. ப் பீடங் காலிங்கராயனி லெழுந்தருளியிருந்து குலசேகரச்சதுர்வேதிமங்கலத்துஸபை யார் செய்யத் திருவாய் மொழிந்தருளினப
10. டி வேதமும் ஸாஸ்த்ரமும் போய் பூர்த்தியாதர்களாயிருக்குஞ் சதுர்வேதிபட்டர்கள் பேர் ஐம்பத்து நால்வர்க்கு ப்ரஹ்மதெயமாக்க
11. ரு நிலக்குடி நாட்டுத் திருத்தங்கால் திருமலை மேல் நின்றருளிய பரமஸ்வாமிகள் தேவதான மிந் நாட்டுத் திருப்பனை யூரு மிவ்வூற் பா
12. ற் பொற் கொடி புதுக்குளமுந்திறப்பூ இருஞ்சோணாட் டுக்குமண மங்கலமுஞ் சேந்த மங்கலமுமாக இவ்வூர்கள் நான் கெல்லைக்கு

13. ட் பட்ட நீர் நிலமுங்கருஞ் செய்புன்செய்யும் நத்தமு முப்பட்ட நிலமுன்னுடையாரும் பழம் பேருந் தவிர்ந்து ஒரூரொரு புறவாக் கிய பனையூ.

14. ற் பாற் புகலோக கண்ட நல்லூரென்று பேர் கூவப் பட்ட நத்தத்திலே குடியிருப்பாராகவும் ஒன்பதாவது முதல் கருநிலக்குடி நாட்டு.

15. க்குலசேகரச்சதுவெ²திமங்கல மென்னும் பேரால் ஸ்ரூஹஸெயஞ் செய்யப் பெறவேணு மென்று ஐயன் காலிங்கராயன் [நமக்குச் சொ]

16. ன்னமையிலிப்பேற்கு இப்பனையூற் பாற்புக லோக கண்ட நல்லூரென்று பேர் கூவப்பட்ட

17. நத்தத்திலே குடியிருப்பாராகவு மிவ்வூர்கள் நான்கு எல்லைக்குட்பட்ட நீர்நிலமுங்கருஞ் செய் புன்செய்.

18. நில முன்னுடையாரும் பழம் பேருந்தவிர்த்து ஒரூரொரு புரவாக்கி இவ்வாண்டு முதல் கருநீலக்குடிநாட்டுக்குலசேகரச் சது

19. வெ²தி மங்கல மென்னும் பேரால் பங்கும் மனையுமெழுதி ஸ்ரூஹஸெயஞ் செய்து வரியிலா ரெழுத்திட்ட வுள்வரியும் நம்மோ லையு

20. ந்தரச் சொன்னோம் இப்படிக் கைக்கொண்டு கல்லிலுஞ் செம்பிலும் வெட்டுவித்துக்கொள்க வென்று திருவாய்மொழி.

21. ந்தருளினார் இவை திருவழுதி வளநாட்டுக் கற்குறிச்சியான ராசராச நல்லூர் ஆஞ்சனேயன் தேர் பொலிய நின்றானான வழுதி நாராயண மூவேந்தவேள

22. ா ன் எழுத்து இவை மிழலைக் கூற்றத்துக் கீழ்க்கூற்று பழங்குன்றத்து விளத்தூருடை யானாட்கொண்டானரங்கனான சேதி ராயன் எ

23. ழுத்து இவை அண்டநாட்டு பெருமணலூர் மந்திரி ஆ சிங்க தேவனெழுத்து

## த.நா.அ. தொல்லியல்துறை   தொடர் எண் : 223/2005

| | | | | |
|---|---|---|---|---|
| மாவட்டம் | : | விருதுநகர் | ஆட்சி ஆண்டு | : இல்லை |
| வட்டம் | : | சிவகாசி | வரலாற்று ஆண்டு | : இல்லை |
| ஊர் | | திருத்தங்கல் | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : 544/1922 |
| மொழி | : | தமிழ் | முன் பதிப்பு | : |
| எழுத்து | : | தமிழ் | | |
| அரசு | : | பாண்டியர் | ஊர்க்கல்வெட்டு எண் | : 2 |
| மன்னன் | : | - | | |

இடம் : நின்ற நாராயணப்பெருமாள் கோயில் மகாமண்டபம் வடசுவர்.

குறிப்புரை : கருநிலக்குடி நாட்டிலமைந்திருந்த திருப்பனையூர் பொற்குடி புதுக்குளம், இருஞ்சோணாட்டு குமணமங்கலம், சேந்தமங்கலம் ஆகிய ஊர்களின் நான்கெல்லைகளுக்குட்பட்ட நிலப்பகுதிகள் ஓரூர் ஒரு புரவாக்கப்பட்டுப் பழம்பெயர் நீக்கிப் பனையூர் பால் புகலோக கண்டநல்லூர் என்ற பெயரால் அழைக்கப்பட்டுள்ளன. இப்புகலோக கண்ட நல்லூர் நத்தத்திலே குடியிருப்போராகவும், நிலம் முன்னுடையோராகவும் இருந்தவர்களுக்குப் பழம் பெயர் தவிர்த்து, குலசேகரச்சதுர்வேதி மங்கலம் என்னும் பெயரால் பங்கும் மனையும் எழுதிப் பிரமதேயம் செய்யப்பட்டமையாக இக்கல்வெட்டு தெரிவிக்கிறது.

1. ஸ்ரீ திருவாணவனச் சக்கரவத்தி கோ நேரின்மை கொண்டான் கருநிலக்குடி நாட்டு குலசேகர சது வெ மங்கலத்து ஸ பையார்க்கு வேத மும்.
2. ஸா ஷ்ஷ்ரமும் போய் வசிர்வநாதர்களாயிருக் குஞ் சதுவெதி ஸட்டர்கள் பேர் ஐம்பத்து நால்வற்கு ஸ்ஹஹதெயமாகக் கருநிலக்குடி நாட்டுத் திருத்தங்காற் திரும
3. லை மேல் நின்றருளின பரமஸ்வாமிகள் தேவதானமிந் நாட்டுத் திருப்பனையூற் பொற்கொடி புதுக்குளமுந்திறம்பு இருஞ் சோணாட்டு குமணமங்
4. கலமுஞ் சேர்ந்த மங்கலமும் ஆக இவ்வூர்கள் நாங்கெல்லைக்குட்பட்ட நீர்நிலமுங் கருஞ்செய் புன்செய்யு நத்தமுமுட்பட்டநிலம் முன்னுடையாரும் பழம் பேருந் தவி
5. ர்த்து ஓரூரொரு புரவாக்கிப் பனையூற்பால் புகலோக கண்ட நல்லூரென்று பேர் கூவப்பட்ட நத்தத்திலே குடியிருப்பாரா கவும் ஒன்பதாவது முதலிந்
6. நாட்டுக் குல சேவரச்சதுவெதி மங்கல மென்னும் பேரால் ஸ்ஹஹதெயஞ் செய்யப் பெற வேணு மென்று ஐய்யன் . . . . காலிங்கரா
7. யர் நமக்குச் சொன்னமையில் இப்பேற்கு இப்பனையூற்பால் புகலோக கண்ட நல்லூரென்று பேர் கூவப்பட்ட நத்தத்திலே குடியிருப்பாராகவுமிவ்
8. வூர்கள் நான்கெல்லைக்குட்பட்ட நீர் நில முங்கருஞ்செய் புன் செய்யுந் நந்தமு முட்பட்ட நிலம்முன்னுடை யாரும் பழம் பேருந் தவிர்த்து ஓரூரொ

9. ரு புரவாக்கி இவ்வாண்டு முதல் இந்நாட்டுக் குலசேவரச்சதுவெதி மங்கலமென்னும் பேராற் பங்கும் மனையும் எழுதி கே

10. ழ்வியும் வரியிலா ரெழுத்திட்ட உள்வரியுந் தரச் சொன்னோம். இப்படிகைக் கொண்டு கல்லிலுஞ் செம்பிலும் வெட்டிக் கொள்கஉ

11. இவை கேரள சிங்க வளநாட்டு வெளியாற் றூருடையான் ஸ்ரீவல்லவன் ஸ்ரீகயிலா ய முடையானானதியாகா பரண மூவேந்த வேளான் எழுத்து

12. இவை கேரளசிங்க வளநாட்டு வெளியாற்றூ ருடையான் பொன்னம்பலக் கூத்தன் திருத்தளியான் விக்கிரம பாண்டியக் கலிங்கதரையன் எழுத்து.

13. இவை அண்டநாட்டுப் பெருமணலூர் மந்திரி ஆதிச்ச தேவனான பல்லவராயன் எழுத்து

